[13th March 1959

the action of the Chief Engineer (Irrigation) in this regard has been ratified by the Government. Action is also being taken with a view to absorb as many of the workmen as possible in other projects in this State.

SRI M. KALYANASUNDARAM : ஸார், ஒரு ப்ராஜக்டில் இருந்து இன்னொரு ப்ராஜக்டுக்கு மாற்றக்கூடிய சமயத்தில் முந்திய ப்ராஜக்டில் வேலை செய்த காலமும் சேர்த்துக் கணக்கிடப்படுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி ஒன்றும் இல்லை என்று நினைக்கிறேன்.

SRI N. R. THIAGARAJAN : இவர்களை அடுத்தாற்போல் ஆரம்பிக்கப்படும் பரம்பிக்குளம் திட்டத்தில் எடுத்துக்கொள்ள முதலிடம் கொடுக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : பரம்பிக்குளம் திட்டம் மட்டும் அல்ல. எங்கெங்கு திட்டங்கள் ஆரம்பித்து வேலைகள் நடக்கின்றதோ அங்கெல்லாம்கூட எடுத்துக்கொள்ளப்படுகிறது.

SRI S. PAKKIRISAMI PILLAI : இது தவிரவும், எம்ப்ளாய் மெண்ட் எக்ஸ்சேஞ்சில் ரிஜிஸ்டர் செய்துகொண்டிருப்பவர்களை ஆங்காங்கு இருக்கும்படியான வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறதா ? அவர்களுக் குப் பிரபரன்ஸ் கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : இந்த வைகை ப்ராஜக்டில் வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களை குந்தா ப்ராஜக்டில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லி இருக்கிறோம். ஹைவேஸ் சீப் இன்ஜினீயரை கேட்டிருக்கிறோம். பரம்பிக்குளம் சீப் இன்ஜினீயரையும் கேட்டிருக்கிறோம். நெய்வேலியில் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டு மென்று அந்த மானேஜிங் டைரக்டரைக் கேட்டிருக்கிறோம். இப்பொழுது சொன்ன ஸ்கீம்களில் 16 பேர்களும் கட்டளை ஹைலெவல் கனலில் 25 பேர் களும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM : பத்துப் பன்னிரண்டு வருஷங் களுக்கும் அதிகமாகக்கூட அந்தப் ப்ராஜக்டில் வேலை செய்தவர்கள் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களை ஒரு ப்ராஜக்டில் இருந்து மற்றொரு ப்ராஜக்டுக்கு மாற்றும்போது தனி சீனியாரிடி லிஸ்ட் வைத்து சம்பளம் மற்றச் சலுகைகள் அனுமதிக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : இது பற்றிப் பரிசீலனை செய்து தான் முடிவு செய்ய முடியும்.

*Panchayat Boards in South Arcot District*

* 770 *Q*.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the number of Class I and Class II Panchayats in the South Arcot district; and

(*b*) the number of Panchayat Boards where seats have not been reserved for the Harijans?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) 19 Class I and 999 Class II panchayats.

(*b*) 388 (Class II panchayats).

*Temple jewels*

* 772 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state the approximate value of jewels in temples in the State?

13th March 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Rs. 4,08,46,255 (rupees four crores, eight lakhs, forty-six thousand, two hundred and fifty-five only). The figure represents the value of jewels in temples where the total value of jewels is Rs. 3,000 and above.

SRI A. A. RASHEED : May I know whether cases of misuse of the jewels have been reported to the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Perhaps, Sir, there has been one or two cases.

SRI A. A. RASHEED : May I know in whose custody these jewels are kept?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : These are kept according to usage and custom and certain regulations. These are generally under the custody of the Executive Officers and Trustees and sometimes under the custody of the Archakas also.

SRI V. SUBBIAH : நமது ராஜ்யத்திலுள்ள தேவஸ்தானங்களில் அதிக மதிப்புள்ள நகைகள் உள்ள தேவஸ்தானம் எது என்று கேட்கிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி என்னிடம் இப்பொழுது தகவல் இல்லை.

SRI M. JAGANNATHAN : Is it a fact, Sir, that in some temples theft of jewels is taking place indiscriminately and what steps Government propose to take to prevent this?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot accept that thefts are taking place indiscriminately in several of the temples.

SRI M. K. SOMASUNDARAM : கோவில் நகைகளை எடுத்துத் துஷ்பிரயோகம் செய்கிறவர்களின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இடம் இருந்தால் க்ரிமினல் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. இல்லாவிட்டால் டிபார்ட்மெண்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI M. KALYANASUNDARAM : சில ஆலயங்களில் துஷ்பிரயோகம் நடைபெற்றிருப்பதாகக் குறிப்பிட்டார்கள். எந்த எந்த ஆலயங்களில் அப்படி நடைபெற்றது ? என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில ஆலயங்கள் என்று சொல்லவில்லை. ஒன்றிரண்டு என்றுதான் சொன்னேன். புரசவாக்கம் கங்காதரேஸ்வரர் கோயில் தர்மகர்த்தர் பேரில் அவ்வாறு புகார் வந்தது. கோர்ட்டிலேயே அதற்குத் தக்க நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்பட்டது.

SRI P. S. SANTHANAM : தலைவர் அவர்களே, பக்தர்கள் விக்கிரகங்களுக்கு உயர்ந்த கல் பதிக்கப் பெற்ற நகைகளைக் கொடுக்கிறார்கள். ஆனால் தர்மகர்த்தர்கள் அந்த உயர்ந்த கல்லைப் பெயர்த்துவிட்டு குறைந்த மதிப்புள்ள கல்லைப் பதித்திருப்பதாக புகார்கள் வந்தன. அதன்மீது என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடத்தில் அந்த மாதிரி புகார் வரவில்லை. அது பற்றிய தகவலும் என்னிடத்தில் இல்லை.